


श्रीगणेशाय नमः

# ஸ்ரீ துர்கா ஸ்தோத்ரம்




பண்டித T. K. ராமச்சந்திர சாஸ்திரியள்

கிரி ப்ரஸ்

பப்ளிஷர்ஸ்

திருவல்லிக்கேணி : : சென்னை-5.

ஶ்ரீ:

# துர்கா ஸ்தோத்ரம்

## துர்கா பூஜாகல்பம்

வைதிக

## துர்கா ஸூக்தமும்




திருவெண்காடு
அபிநவவ்யாஸ, வரகவி, வேதாந்த வித்வான்,
தைவக்ஞ பூஷணம்
பண்டிட் டி. கே. ராமச்சந்திர சாஸ்திரிகளால்

(எளிய தமிழ் நடையில் எழுதிய பதவுரை
கருத்துரைகளுடன் கூடியது)

பப்ளிஷர்ஸ் :
கிரி ப்ரஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5.

Price: Rs. 1-50 nP.

# ஸமர்ப்பணம்

न्याय वेदान्त विज्ञेन श्वेतारण्य निवासिना ।
अर्पिता रामचन्द्रेण देव्याश्चरणयोरियम् ॥

ஸ்ரீ துர்கா தேவியை உபாஸிக்கும் மெய்யன்பர்களுக்கு பயன்படும்படி இப்புத்தகம் எழுதப்பட்டிருக்கிறது. இப்புத்தகத்தை எழுதும்படி என்னை தூண்டியவரான ஸ்ரீமான் V. ஸ்ரீனிவாசய்யர் அவர்களுக்கும், ஆஸ்திகத்தை பரப்புவதே நோக்கமாகக் கொண்டு பக்தியைப் பரப்பும் பல புத்தகங்களை வெளியிடும் கிரி பிரஸ் சொந்தக்காரருமான ஸ்ரீ கைலாஸமய்யர் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

இப்புத்தகத்தைப் படித்துப் பயன்பெறுமாறு ஆஸ்திக உலகத்தைக் கோரும்,

பண்டித T. K. ராமச்சந்திர சாஸ்திரி.

**டாக்டர் ஸி. எஸ். வேங்கடேசுவரன்,**
எம். ஏ., பிஎச் டி.,
ஸம்ஸ்கிருதப் பேராசிரியர்
அண்ணுமலை பல்கலைக்கழகம்
அண்ணுமலைநகர்.

# மதிப்புரை

---

வேத வேதாந்தங்களில் தேர்ச்சி பெற்றவரும் ஸ்ரீ துர்கா தேவியின் அருளால் தெளிந்த மனதை யுடையவருமான திருவெண்காடு ஸ்ரீ. டி. கே. ராமசந்திர சாஸ்திரிகள் அவர்களால் தேன்மொழியாகிய தென்மொழியில் மிக மிக இலகுவாக அறிந்துகொள்ளக் கூடியதும் இனியதுமான முறையில் மொழி பெயர்க்கப்பெற்ற யஜுர்வேதாந்தர்கத துர்கா ஸூக்தமும் மகாபாரதத்தில் உள்ள துர்கா ஸ்தோத்ரமும் நன்கு ப்ரகாசிக்கின்றன.

எல்லா தேவர்களிடத்தும் விளங்கும் சக்தி ரூபமாயும் யாவருக்கும் அன்னையுமானவள் துர்காதேவி. துன்பப்படுபவர்களால் துன்பத்திலிருந்து விடுபடவும் ஸுகசாலிகளால் உத்தம ஸுகத்தை யடையவும் உபாஸிக்கக் கூடியவள். ஒப்பற்ற சக்தி வாய்ந்தவள். துஷ்டர்களால் அடையமுடியாதவள். சிஷ்டர்களால் எளிதில் அடையக் கூடியவள்.

துர்கமன் என்ற அஸுரனைக் கொன்றதுபோல நம்மிடமுள்ளதும் எளிதில் கடக்க முடியாததுமான காமம் க்ரோதம் முதலிய அஸுரத் தன்மைகளை நாசம் செய்யக் கூடியவள். நித்திய வாழ்க்கையில் ஏற்படக்கூடிய பற்பல துன்பங்களிலிருந்து விலக்கி விடுவதுபோல கடக்க முடியாத ஸம்ஸார சமுத்திரத்தினின்று தாண்டுவிக்கக்கூடிய ஸ்ரீ தேவியானவள் ஸுகத்தை விரும்பும் யாவராலும் அடைக்கலமாக அடையத் தகுந்தவள்.

ஏனென்றல் ஸுகத்தைக் கொடுக்கும் சக்தி உள்ளவளும், பக்தர்களிடத்து அன்புள்ளவளும் கருணையலைமோதுகின்ற மனதுள்ளவளும், தாய் போன்றவளும் துர்கா தேவியே.

ஏழு மந்திரங்களைக்கொண்ட இந்த துர்கா ஸூக்தத்தில் அக்னிபோல் ப்ரகாசிக்கின்றவளும், ஸமுத்திரத்தை ஓடத்திஞல் போல ஸம்ஸார ஸாகரத்தினின்றும் தன் அருளால் தாண்டி, வைப்பவளும் அடைய முடியாததை அடையும்படிச் செய்பவளும், அடைந்ததைக் காப்பவளும், பசு, பொருள், தான்யம், மகப்பேறு இவைகளைப் பூர்ணமாய்க் கொடுத்து பக்தர்களை அனுக்ரஹிக்கவும் பூவுலகில் தோன்றிஞள் என்று ப்ரார்த்திக்க தகுந்தவளாக வர்ணிக்கப் படுகிறது.

சிலர் இந்த ஸூக்தத்திற்கு ப்ரம்ஹபரமாகவும் விஷ்ணு பரமாகவும் வ்யாக்யானம் செய்துள்ளார்கள். இந்த மந்த்ரங்களுக்கு சக்தி ரூபமான துர்கா பரமான வித்யாரண்யஸ்வாமிகள் வ்யாக்யானமும் பொருத்தமுள்ளதே. ஏனென்ருல் சக்தியில்லாமல் மும்மூர்த்திகளுள் ஒருவரும் கூட தம் தம்காரியங்களைச் செய்ய இயலாது.

இந்த ஸூக்தமும் துர்கையின் குணுதிசயங்களைப் பற்றிப் புகழ்கின்றது. மொழிபெயர்ப்பாளர் ஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களும் துர்கா தேவியை உபாசிப்பவர். இவ்விதம் சேர்ந்தது பொன் மலர், வாசனையை யடைந்தது போன்றதே.

துர்கா ஸ்தோத்ரத்திலும் அக்ஞாதவாசம் செய்ய வேண்டியதற்காக, விராட நகரம் செல்ல விரும்பிய யுதிஷ்டிரர், 27 சுலோகம் கொண்ட இந்த நக்ஷத்ரமாலிகா ஸ்துதியிஞல் விந்திய பர்வதத்தில் வஸிப்பவளும் பக்தர்களை ஸகல வித துன்பங்களிலிருந்தும் தாண்டிவைப்பவளும் வெற்றியைக் கொடுப்பவளும் மூன்றுலகத்திற்கும் ஈசுவரியாயும் உள்ள துர்கா தேவியை துதிக்கின்ருர். இந்த ஸ்தோத்திரத்தின் முடிவில் 9 ச்லோகங்களால் ஸாக்ஷாத் தேவியிஞலேயே துதியின் பயனும் சொல்லப்பட்டுள்ளது.

துர்கையின் தனிப்பெருமைவாய்ந்த 108 நாமங்களுடன் கூடிய பூஜா கல்பமும் இந்நூலில் சேர்க்கப் பட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

துருஹமான ஸூக்தத்திற்கும் ஸ்தோத்ரத்திற்கும் ஸாதாரண ஜனங்களும் அதன் பொருளை நன்கு அறிந்து கொள்ளும் வகையில் மொழிபெயர்ப்பாளரின் யத்னம் அமைந்துள்ளது.

அர்த்தத்தை நன்கு அறிந்து ஜபிக்கப் பட்ட மந்திரங்கள் உபாஸகனுக்கு பூரண பலனை அளிக்கின்றன என்பது சாஸ்திரங்களின் கருத்து.

ஆகவே, இந்த ஸ்தோத்திரத்தையும் ஸூக்தத்தையும் குருவின் உபதேச முறைப்படி த்ருகரண சுத்தியுடன் ஜபித்து ஜகன்மாதாவான ஸ்ரீ துர்கா தேவியின் அருளால் ஸர்வாபீஷ்டங்களையும் ஆஸ்திகர்கள் அனைவரும் அடைவார்களாக.

**C. S. வேங்கடேசுவர சர்மா.**

போலகம் சாஸ்த்ர ரத்னுகரம்

**ஸ்ரீ. ஸ்ரீராம சாஸ்திரிகள்**

புரொபசர், ஸம்ஸ்கிருத காலேஜ்,
மைலாப்பூர், சென்னை.

உ

**आपदि किं करणीयं स्मरणीयं चरणयुगलं अंबाया: ।**
**तत्स्मरणं किं कुरुते, ब्रह्मादीनपि च किंकरीकुरुते ॥**

ஆபதி கிம்கரணீயம் ஸ்மரணீயம் சரணயுகளம் அம்பாயா:
தத்ஸ்மரணம் கிங்குருதே ப்ரம்ஹாதீனபிச கிங்கரீ குருதே ||

ஆபத்துவரும் காலத்தில் என்ன செய்ய வேண்டும்? உலக மாதாவாகிய ஸ்ரீ துர்காம்பிகையின் சரணுர விந்தங்களை த்யானம் செய்யவேண்டும். அவ்விதம் த்யானம் செய்தால் என்ன ஏற்படும்? ப்ரம்மாதி தேவர்களும் அம்பிகையின் ஆக்ஞையினுல் நமக்குக் கிங்கரர்களாய் அமைந்து நமது அபீஷ்டங்களைக் கொடுப்பார்கள் என்று பெரியோர்கள் அருள்வாக்கு என்பது உலகத்தில் பிரசித்தம். ஆகையால் நமக்கு ஆபத்து வராமல் தடுப்பதற்கும், வந்த ஆபத்து விலகுவதற்கும், நமது ஸர்வாபீஷ்டங்களும் கை கூடுவதற்கும் உலக மாதாவாகிய ஸ்ரீ துர்கையின் அருளைப் பெற வேண்டும். அவ்விதம் துர்கையின் அருளைப் பெற அரிய ஸ்தோத்ரம், ஸூக்தம் இவைகளால் துர்கையை ஸ்துதிப்பதும் விதிப்படி துர்கையைப் பூஜிப்பதும் இன்றியமையாததாகும்.

அவ்விதம் துர்கையின் வழிபாட்டிற்கு அவசியம் வேண்டிய ஸ்ரீ துர்கா ஸதோத்ரம், துர்கா பூஜா கல்பம், துர்கா ஸூக்தம் இவைகளை பல புராணங்களிலிருந்து எடுத்து தொகுத்து எளிய நடையில் தமிழில் உரை எழுதி வெளிப்படுத்தியவர் திருவெண்காடு பண்டித டி. கே. ராமசந்திர சாஸ்திரிகள்.

இவர் வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களில் விசேஷ பரிச்யமுள்ளவரும், உபன்யாஸ சாதுர்யம் ஸதாசாரம் ஆத்ம குணங்கள் எல்லாம் அமைந்தவரும் ஆவர்.

இந்த கிரந்தங்கள் போற்றத்தக்கதாய் அமைந்திருப்பது உலகத்திற்குப் பெரிய உபகாரமாகும். இதை யாவரும் வாங்கிப்படித்து ஸகலச்ரேயஸ்ஸையும் அடையலாம் என்பது எனது பரிபூர்ண நம்பிக்கை. இதேமாதிரி அவர் இன்னும் பல அரிய கிரந்தங்களை வெளியிடவும் ஜனங்கள் இதற்கு உதவி புரியவும் கோருகிறேன்.

மைலாப்பூர்
15—1—1953

ஸ்ரீ. ஸ்ரீ ராம சாஸ்திரிகள்:

# மூன்றும் பதிப்பு

உலகத்தில் பிறந்த ஒவ்வொருவரும் தனக்கு நேர்ந்த துன்பங்களை விலக்கி இன்பமாக இருக்க விரும்புவது இயற்கையானது. ஆனால் நம்முடைய முன்வினை நம்மை துன்பக்கடலில் முழுகச்செய்து; வரும் இன்பத்தையும் தடுத்துவிடுகின்றது. நமது பாபமான கர்மவினையைக் களைந்தெறிய தெய்வத்தால்தான் முடியும், அதிலும் தெய்வங்களில் சிறந்தவளும் ஸகலசக்தி ஸ்வரூபிணியும் அடைய முடியாததையும், அடையும்படிச் செய்பவளுமான ஸ்ரீ துர்கா பரமேச்வரியை ஏகாக்ர மனதுடன் தியானம் செய்து மூலமந்த்ரத்தை ஜபித்தும் ஸ்தோத்ரத்தினாலும் துர்கா ஸூக்தத்தினாலும் துதித்தும் நமது பலமான பாபரூப கர்மவினையைக் களைந்தெறிந்து ஜகன்மாதாவின் திருவருளால் ஸகல போகபாக்யங்களையும் மனதார அனுபவித்து இனிது வாழலாம். இவ்வுபாயத்தை அறிந்து யாவரும் அன்னையின் பூரண அருளடைய வேண்டி இம் மூன்றுவது பதிப்பில் ஸ்ரீ துர்கா யந்த்ரம் அஷ்டாக்ஷர மந்த்ரம் முதலியது விசேஷமாகச் சேர்த்து வெளியிடப்பட்டிருக்கிறது. இதில் கண்ட துர்காயந்த்ரத்தை செப்பு வெள்ளி தங்கம் தகடுகளில் நன்கு அமைத்து ப்ராண ப்ரதிஷ்டை செய்து துர்கையை பூஜித்து இந்த மந்திரத்தையும் துர்கா ஸூக்தத்தையும் தங்களுடைய காரியத்துக்குத் தகுந்தவாறு ஜபம் செய்தும் தசாம்சம் ஹோமம் செய்து தசாம்சம் பாலினால் தர்பணம் செய்தும் தசாம்சம் ப்ராம்மண போஜனம் செய்தும் ஒன்பது கன்னிகைகளை (ஸுவாஸினிகளை) பூஜிக்க ஸர்வா

பீஷிடங்களும் உண்டாகும். இதற்காகவே நம் முன்னோர்களான தவத்திற் சிறந்த வ்யாசாதி முனிவர்கள் தங்களுடைய நூல்களில் துர்காம்பிகை யின் மகிமையை நன்ருக எடுத்துக்காட்டியிருக்கிருர் கள். ஸர்வாரிஷ்டஹர துர்கா சாந்தி ப்ரகர ணத்தில்

श्रुणुराजन् प्रवक्ष्यामि सर्वशास्त्रार्थ संमतं ।
दुर्गाशान्ति विधानेन सर्वारिष्ट विनाशिनीं ॥
अतर्किता पदंप्राप्तौ संचितार्थस्य नाशने ।
कारागृह प्राप्तिभये पुत्रमित्रादि विग्रहे ॥
कलत्र (स्वपति) प्रातिकूल्ये च जातपुत्रादि संक्षये ।
विघ्नेचारब्ध कार्यस्य क्षेत्रारामादि संक्षये ॥
सर्वापद्विनि वारिण्याः दुर्गाया राधनंचरेत् ।
एवं अंबाप्रसादेन सर्वान्कामान्समश्नुते ॥

தனித்தனியான பலன்களை விரும்பி பலதெய்வங் களை வழிபடுவதைக்காட்டிலும் துர்காதேவியை வழிபட்டு ஸகல பலன்களையும் அடையலாம். ஸ்தோத்ரம் ஸூக்தம் முழுவதும் ஜபம் செய்ய முடியாமல் போனலும், அஷ்டாக்ஷர மந்த்ரத்தையும் தேவியின் ப்ரணவ ரூபமாயும் மாயாபீஜமாயும் அமைந்துள்ள ஹ்ரீங்கார மந்திரத்துக்கும் ஆதார மான துர்கா ஸூக்தத்தின் 2வது மந்திரத்தை மட் டும் ஜபம் செய்வதும் நன்மை தரும் என்று நன்கு விளக்கியுள்ளார்கள். இப்புத்தகத்திலுள்ள குற்றம் நீக்கி குணம்கொண்டு பயன்படுத்திக்கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

T. K. ராமச்சந்திர சாஸ்திரிகள்.



ஸ்ரீ துர்காம்பிகை

ओं

# श्री दुर्गा महा यन्त्रम्



मन्त्राक्षर मयींदेवीं मातृकारूप धारिणीं ।
नव दुर्गात्मिकां साक्षात् कन्यां आवाहयाम्यहम् ॥

## ஸ்ரீ துர்கா அஷ்டாக்ஷரீ மஹாமந்த்ரம்

अस्य श्री दुर्गापरमेश्वरी अष्टाक्षर महामन्त्रस्य, महेश्वर ऋषिः अनुष्टुप्छन्दः श्री दुर्गापरमेश्वरी देवता, दुं बीजं, ह्रीं शक्तिः, ओं कीलकं, मम (सकुटुंबस्य) सर्वारिष्ट शान्त्यर्थं सर्वाभीष्ट सिध्यर्थं च जपे (होमे) विनियोगः

अथन्यासः

ह्रां = अंगुष्ठाभ्यां नमः = हृदयाय नमः
ह्रीं = तर्जनीभ्यां नमः = शिरसे स्वाहा
ह्रूं = मध्यमाभ्यां नमः = शिखायैवषट्
ह्रैं = अनामिकाभ्यां नमः = कवचायहुं
ह्रौं = कनिष्ठिकाभ्यां नमः = नेत्रत्रयायवौषट्
ह्रः = करतलकरपृष्ठाभ्यां नमः = अस्त्रायफट्

भूर्भुवस्सुवरों इति दिग्बन्धः, ध्यानं

दूर्वानिभां त्रिणयनां विलसत्किरीटां
शंखाब्ज खड्गशर खेटक शूल चापान्।
संतर्जनींच दधतीं महिषासनस्थां
दुर्गांनवार कुलपीठगतां भजेऽहम्।

(लमित्यादिपंचपूजा)

लं = पृथिव्यात्मने - गन्धं समर्पयामि (லம் ப்ருதிவ்யாத்மனே கந்தம் ஸமர்பயாமி)

हं = आकाशात्मने - पुष्पाणि समर्पयामि (ஹம் ஆகாசாத்மனே புஷ்பாணி ஸமர்பயாமி)

यं = वाय्वात्मने धूपमाघ्रापयामि (யம் வாய்வாத்மனே தூபமா'க்ராபயாமி)

रं = वन्यात्मने दीपं दर्शयामि (ரம் வந்யாத்மனே தீபம் தர்சயாமி)

वं = अमृतात्मने अमृतं महानैवेद्यं निवेदयामि (வம் அம்ருதாத்மனே அம்ருதம் மஹாநைவேத்யம் நிவேதயாமி)

(ஸம் ஸர்வாத்ம்னே ஸர்வோபசாராந் ஸமர்பயாமி)

மூலமந்த்ர, ओं ह्रीं दुं दुर्गायै नमः

இந்த மந்த்ரத்தை 9 தடவைக்கு குறையாமல் 108, 1008, 10008 தடவை ஜபிக்கவும். ஜபித்த பிறகு அங்கந்யாசம், த்யானம், லமித்யாதி மானஸ பூஜை செய்து முடிக்கவும்.

இது ஸம்பந்தமாக இன்னும் அதிக விபரங்கள் அறிய விரும்பினலும் மற்ற மந்த்ரயந்த்ரங்கள் விஷய விபரத்திற்கும் மாந்த்ரிக ஆயுர்வேத சிகித்ஸை ஜ்யோதிஷம் முதலிய விபரங்களுக்கும் அடியில்கண்ட விலாசத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

1/36, மங்கமடத் தெரு,
திருவெண்காடு P.O.

பண்டிட் T. K. ராமச்சந்திர சாஸ்த்ரிகள்.



श्रीगणेशाय नमः

# ஸ்ரீ துர்கா ஸ்தோத்ரம்

---

ध्यानम्

केनोपमा भवतु तेऽस्य पराक्रमस्य
रूपं च शत्रुभयकारि अतिहारि कुत्र ।
चित्ते कृपासमरनिष्ठुरता च दृष्टा
त्वय्येव देवि वरदे भुवनत्रयेऽपि ॥

கேனோபமா பவது தேஸ்ய பராக்ரமஸ்ய
ரூபம் ச சத்ருபயகாரி அதிஹாரி குத்ர।
சித்தே க்ருபாஸமரநிஷ்டுரதா ச த்ருஷ்டா
த்வய்யேவ தேவி வரதே புவனத்ரயேபி॥

அவதாரிகை:—

மகிஷாஸுரவதம் செய்த தேவியை இந்திரன் முதலான எல்லா தேவர்களும் இவ்வாறு துதிக்கின்றனர்.

பதவுரை :—

ते - தே = (இந்திராதி தேவர்களாலும் இதர யக்ஷராக்ஷஸர்களாலும் வெல்ல முடியாத மகிஷா ஸுரனை வதம் செய்த) உன்னுடைய अस्य - அஸ்ய = இம்மாதிரி ஆச்சரியப் படத்தகுந்த पराक्रमस्य - பராக்ரமஸ்ய மிக மிகப் பலம் வாய்ந்த சத்ருக்க ளையும் எளிதில் வெல்லக்கூடிய தேக பலம், புத்தி பலம் இவைகளுக்கு केन – கேன = எவர்களுடைய (பலத்துடன்) उपमा - உபமா = உபமானம் (ஸாத்ருச் யமானது) भवतु - பவது = பொருந்தும் शत्रु भयकारि - சத்ரு பயகாரி = சத்ருக்களுக்குப் பயத்தை உண்டு பண்ணக்கூடியதும் अतिहारि - அதிஹாரி = தன் அழ கினல் (ஸௌந்தர்யத்தினல்) மற்ற எல்லாருடைய அழகையும் அடக்கக்கூடியதுமான रूपं च - ரூபம் ச = தேக ஸௌந்தர்யமும் कुत्र-குத்ர = எங்கே (இருக் கிறது) चित्ते-சித்தே = மனதில். कृपा-க்ருபா = தயையும் समर निष्ठुरता च - ஸமர நிஷ்டுரதா ச = யுத்தக்களத் தில் கொடூரமான தன்மையும் कुत्र - எங்கே இருக் கிறது वरदे - வரதே = எந்த வரத்தையும் கொடுக்கக் கூடிய हे देवि - ஹே தேவி = ஹே அம்பிகே भुवनत्रयेपि – புவனத்ரயேபி = மூன்று உலகத்திலும் (தேடிப் பார்த்தாலும்) त्वय्येव (त्वयि-एव) - த்வய்யேவ (த்வயி ஏவ) = உன்னிடத்தில் மட்டும்தான் (दृश्यते - த்ருச்யதே = காணப்படுகிறது).

கருத்துரை :—

மிகவும் அதிக பலம் பொருந்திய மகிஷாஸுரனை வதம் செய்யக்கூடிய, இம்மாதிரியான உன்னுடைய பலத்திற்கு யாருடைய பலமும் ஈடாகாது. ஆகவே, இம்மாதிரியான பல முள்ளவர்கள் வேறு யாருமில்லை. சரீர ஸௌந்தர்யம்

பொருந்தியவர்கள் பலர் இருக்கலாம். அதுபோல மிகுதியான தேக பலம் பொருந்தியவர்கள் பலர் இருக்கலாம். ஆனுல் ரூபத்தைப் பார்த்த மாத்திரத்தில் சத்ருக்கள் கண்டு நடுங்கும் படியுள்ள பலமும் நல்ல தேக ஸௌந்தரியமும், மகா துஷ்டர்களையும் கொல்லக் கூடிய வலுவுள்ளவளாகவும் இருப்பவள் உலகில் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. அதுபோல இளகிய மனதும் யுத்தகளத்தில் ஸ்திரமாய் கடோரமாய் நிற்பதும் உன்னிடத்தில்தான் காணப்படுகிறது. இவ்வுலகத்தில் மட்டும் அல்ல, மூவ்வுலகத்தில் தேடினுலும் கோடி ஸூர்யப்ரகாசம் போன்ற தேக காந்தியும் எல்லா வரத்தையும் கொடுக்கக் கூடியவளும் நீதான். ஆகவே உனக்கு உபமானம் நீயேதான், வேறு யாருமில்லை என்பது கருத்து.

---

ओम्

मूलमन्त्रम्

# மூலமந்த்ரம்

श्रीदुर्गादेवीमन्त्रराजः

दुर्गे स्मृता हरसि भीतिं अशेषजन्तोः
स्वस्थैः स्मृता मतिं अतीव शुभां ददासि ।
दारिद्रियदुःखभयहारिणि का त्वदन्या
सर्वोपकारकरणाय सदार्द्रचित्ता ॥

தூர்கே ஸ்ம்ருதா ஹரஸி பீதிம் அசேஷஜந்தோ:
ஸ்வஸ்த்தை; ஸ்ம்ருதா மதிம் அதீவ சுபாம்
ததாஸி ।
தாரித்ரிய து:க்க பயஹாரிணி கா த்வதந்யா
ஸர்வோபகாரகரணய ஸதார்த்ர சித்தா ॥

அவதாரிகை :—

ஸ்ரீ மார்க்கண்டேய மஹா புராணத்தில் ஆபரணம்போல் விளங்குவது தேவீ ஸப்தசதீ. இதில் 700 மந்திரங்கள் உள்ளன. இந்த 700 மந்திரங்களுக்குள் மிக மிகப்ரதான மான இந்த சுலோக ரூபமான மகா மந்திரம்தான், மந்திர சாஸ்திரங்களில் முக்யம் வாய்ந்தது. இதை ஒன்பது தரத் திற்கு குறையாமல் ஜபிக்க வேண்டும்.

பதவுரை :—

**दुर्गे - தூர்கே = ஹே தூர்க்காதேவியே स्मृता - ஸ்ம்ருதா = பக்தர்கள் உன்னை நினைத்தால் (அப்படி நினைத்த மாத்திரத்திலேயே) अशेषजन्तोः - அசேஷ ஜந்தோ: = எல்லா ப்ராணிகளுடைய भीतिं - பீதிம் = பயத்தையும் हरसि ஹரஸி = போக்கடிக்கிறாய் स्वस्थैः -**

ஸ்வஸ்தை: = எந்த விதத்திலும் குறைவு இல்லாமல் இல் வாழ்க்கையில் இருப்பவர்களால் स्मृता - ஸ்ம்ருதா = நினைக்கப்பட்டால் अतीव - அதீவ = மிகவும் शुभां - சுபாம் = நன்மை அளிக்கக்கூடிய मतिं - மதிம் = புத்தியை (ஆத்மஞானத்தை) ददासि - ததாஸி = கொடுக்கிறாய் सर्वोपकार करणाय - ஸர்வோபகார கரணாய = எல்லோருக்கும் எல்லா உபகாரங்களையும் செய்யும் பொருட்டு सदा - ஸதா = எப்பொழுதும் आर्द्र - ஆர்த்ர = நனைந்த, அதாவது மிகவும் இளகிய கருணையுள்ள चित्ता - சித்தா = மனதை யுடையவளாயும் दारिद्रियदुःखभयकारिणि - தாரித்ரிய துக்கபய ஹாரிணி = பொருளில்லாமை, அதன்மூலமும் இதர ஸாதனங்களின் மூலமும் ஏற்படும் துக்கம், எல்லா வித பயம் இவைகள் எல்லாவற்றையும் ஒருங்கே போக்கடிக்கக்கூடியவள்; त्वदन्या - த்வதன்யா = உன்னைத் தவிர का - கா = யார் (இருக்கிறார்கள்) ஒருவருமில்லை.

கருத்துரை :—

உலகில் யாராவது ஒருவர் உன்னைப் பற்றி நினைத்த மாத்திரத்திலேயே (யாவரும் சேர்ந்து துதித்தால் என்ன ஸந்தோஷம் உண்டாகுமோ அம்மாதிரியான ஸந்தோஷத்தை அடைந்து) எல்லா ப்ராணிகளுடைய துக்கத்தையும் போகும்படி செய்து விடுகின்றாய். கஷ்டப்படாமல் எல்லா ஸௌகரியங்களோடும் இருப்பவர்கள் உன்னைத் துதித்தால் அவர்களுக்கு நல்ல உத்தமமான ஆத்ம ஞானத்தை அளிக்கின்றாய். மனித வர்க்கத்தினருக்கு ஆத்ம ஞானத்தைத் தவிர நன்மை பயக்கக்கூடியது வேறொன்றுமில்லை. ஆகவேதான், ப்ரதர்தனன் என்ற அரசன் இந்திரனிடம் வரம் கேட்டுக்கொள்ளுங்கால், ஹே இந்திரனே! மனிதர்களுக்கு எது மிகவும் உயர்ந்த ஹிதமோ அதைக் கொடு என்று கேட்க, இந்திரன் ஆத்ம ஞானத்தை உபதேசித்தான். ஆதலால், அம்பிகை ஸகல போகங்களையும்

அனுபவித்தவர்களுக்கு ஆத்மஞானம்தான் உகந்தது என்று நினைத்து அதைக் கொடுக்கின்றாள். தரித்திரத்தால் வாடுபவர்கள் அம்பிகையை ஆராதித்தால் அவர்களுடைய தரித்ரம் நீங்கி மிகுந்த செல்வத்தை அடைவார்கள்.

ஆதி பௌதிகம், ஆதி தைவிகம், ஆத்யாத்மிகம் என்ற மூன்றுவித பயத்தை யடைந்தவர்களும் அம்பிகையை உபாசித்து துக்கத்தினின்றும் விடுபட்டு க்ஷேமத்தை அடைகிறார்கள். ஆகவே எந்த விதமான பயமும் அம்பிகையை உபாசிப்பவர்களுக்கு உண்டாகாது என்பது திண்ணம். எப்பொழுதும் இளகிய மனதுள்ளவளாயும் யாவருக்கும் எந்த விதமான உபகாரத்தையும் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தையுடையவளும் அதுபோல வேண்டிய வரன்களையும் கொடுப்பவளாயும் உள்ளவள் உன்னைத்தவிர உலகில் யாருமில்லை.

गगनं गगनाकारं सागरस्सागरोपमः।
दुर्गा दुर्गेव सा देवी तद्द्वितीया न विद्यते ॥

ககனம் ககனாகாரம் ஸாகரஸ்ஸாகரோபம:|
துர்கா துர்கேவ ஸா தேவீ தத்த்விதீயா ந
|| வித்யதே ||

எப்படி ஆகாசத்துக்கு ஆகாசத்தைத் தவிர வேறு உபமானம் இல்லையோ, ஸமுத்திரத்திற்கு ஸமுத்திரத்தைத் தவிர வேறு உபமானம் இல்லையோ, அதுபோல உனக்கு உன்னைத்தவிர வேறு யாரும் உபமானம் இல்லை. ஆகவே, துர்காம்பிகை அவ்வளவு உதாரகுணம் பொருந்தியவள் என்பது பொருள்.

ओम् श्रीगणेशाय नमः

श्रीदुर्गास्तोत्रप्रारंभः

श्रीदुर्गा नक्षत्रमालिका स्तुतिः

# ஸ்ரீ துர்கா நக்ஷத்ரமாலிகா ஸ்துதி:

---

(தர்மபுத்ரர் தன் சகோதரர்களோடும் பத்னி த்ரௌபதியோடும் அஞ்ஞாதவாசம் செய்யும் காலத்தில், தன் கஷ்டங்கள் நீங்கவும் தங்களை யாரென்று அறியாமலிருக்கும் பொருட்டும் மாபெரும் மஹர்ஷிகளால் உபதேசம் செய்யப்பட்டு இந்த 27 ச்லோகம் கொண்ட ஸ்ரீதுர்கா நக்ஷத்ரமாலிகா ஸ்துதியினுல் ஸ்ரீதுர்காதேவியை ஸ்தோத்ரம் செய்தார். இந்த ஸ்தோத்திரத்தால் திருப்தியடைந்த தேவி பாண்டவர்களுக்கு ஆசி கூறினுள். தேவியின் ஆசிப்படி அவர்களுடைய கஷ்டங்கள் நீங்கி யாவராலும் அறிந்துகொள்ளப்படாமல் அஞ்ஞாத வாசத்தை முடித்துக்கொண்டு யுத்தத்தில் வெற்றிபெற்று ஸுகமாக வாழ்ந்தனர்.

ஜனமேஜய மகாராஜன் தன் மூதாதியர்களான பாண்டவர்களின் 12 வருட வனவாசம் முடிய விருத்தாந்தங்களை கேட்டு, அஞ்ஞாத வாசத்தை எப்படி முடித்தார்கள் என வைசம்பாயன முனிவரைக் கேட்க, முனிவரும் தர்மபுத்திரரால் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட இந்த நக்ஷத்ர மாலிகா ஸ்துதியைச் சொல்லுகிருர்.)

विराटनगरं रम्यं गच्छमानो युधिष्ठिरः।
अस्तुवन्मनसा देवीं दुर्गां त्रिभुवनेश्वरीम् ॥ १ ॥

விராடநகரம் ரம்யம் கச்சமானே யுதிஷ்டிர:।
அஸ்துவன்மனஸா தேவீம் துர்காம் த்ரிபுவனேச்வரீம் ॥1॥

அவதாரிகை:—

ஸ்ரீதுர்கா தேவியை தர்மபுத்ரர் இந்த சுலோகம் முதற்கொண்டு 27 சுலோகங்களினுல், (துர்கா நக்ஷத்ரமாலிகா ஸ்துதியினுல்) ஸ்தோத்ரம் செய்கிருர்.

"ஸாதாரணமாக உலகில் ஒருவனிடம் இல்லாத தன்மையைச் சொல்லிப் புகழ்வது ஸ்தோத்ரம்" என்று நினைக்கின்றனர். அது தவறு. "அவரவர்களிடத்தில் உள்ள உண்மையான சக்திகளைச் சொல்லிப் புகழ்வதுதான் ஸ்தோத்ரம் என்று பெயர்" என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகவே, இந்த ஸ்தோத்ரத்தில் வர்ணிக்கப் படுபவை யாவும் தேவியிடம் உண்மையாகவே அமைந்துள்ளன."

பதவுரை:—

**रम्यं**-ரம்யம்=அழகு வாய்ந்த; **विराटनगरं**-விராட நகரம்=விராட ராஜனின் பட்டணத்தைக் குறித்து **गच्छमानः**-கச்சமாந: =போய்க் கொண்டிருக்கிற; **युधिष्ठिरः**-யுதிஷ்டிர:=தர்மபுத்ரர்; **त्रिभुवनेश्वरीम्**-த்ரிபுவநேச்வரீம்=மூன்று உலகத்திற்கும் நாயகியாயும்; **देवीं**-தேவீம் = நன்கு ப்ரகாசிக்கின்றனவளாயும் : (உள்ள) **दुर्गाम्**-துர்காம்=ஸ்ரீ துர்காதேவியை; **मनसा**-மநஸா = மனதினால்; **अस्तुवत्**-அஸ்துவத் =துதித்தார்.

கருத்துரை:—

யுதிஷ்டிரர் தன் தம்பிகளுடனும் பத்னியான த்ரௌபதியுடனும் விராட நகரத்துக்குச் செல்லுங்கால் மனதினால் தேவியைத் துதித்தார். உலகில் உள்ள எல்லா தேசங்களைக் காட்டிலும் மிகச் செழுமை வாய்ந்தது விராட நகரம். அஃதனால்தான் வ்யாசர் அழகு வாய்ந்தது என்று கூறினார். செல்ல முடியாத இடத்திலும் செல்லும்படி செய்விப்பதால் தேவிக்கு துர்கை என்று பெயர். ஆகவேதான் தர்மரும் இந்தக் கஷ்டமான கட்டத்தைக் கடக்கவேண்டி துர்கையை துதிக்கின்றார்.

உலகிலேயே மிகமிகக் கஷ்டமானது பிறர் மனையில் இருப்பதும் பிறரின் அன்னத்தைப் புசிப்பதுமே. ஸார்வபௌமனாயிருந்தவர்கள் கூலி வேலை செய்து பிழைப்பது எவ்வளவு கஷ்டம் என்பது யாவரும் அறிந்ததே.

மூன்று உலகத்திற்கும் நாயகியாக இருக்கத் தகுதி உள்ளவளும் எல்லோராலும் விரும்பப்பட்டவளாயும் ஸூர்யன் போல் ப்ரகாசிக்கின்றவளாயும் உள்ள துர்கா

தேவியை மனதினால் துதித்தார். வாக்கினால் வெளிப்படை யாக உரக்கச் சொல்லுவதைக் காட்டிலும் மனதோடு சொல்லி ஜபிப்பது விசேஷம். இதுதான் உயர்ந்த முறை என்று சாஸ்திரங்களில் கூறப்படுவதால் தர்மபுத்ரரும் மன தினால் துதித்தார். ஆகையால் நாமும் ஏகாக்ர சித்தத்துடன் மனதினால் ஜபிப்பது நல்லது.

**यशोदागर्भसंभूतां नारायणवरप्रियाम्**
**नन्दगोपकुले जातां मंगल्यां कुलवर्धनीम् ॥ २ ॥**

யசோதாகர்பஸம்பூதாம் நாராயண வரப்ரியாம்।
நந்தகோபகுலே ஜாதாம் மங்கள்யாம் குலவர்த்
[தனீம் ॥ 2 ॥

அவதாரிகை:—

துர்கா தேவியின் பற்பல காரணத்திற்காக ஏற்பட்ட ஆவிர்பாவத்தையும் அதன் பயனையும் கூறுகிறார்.

பதவுரை:—

**यशोदागर्भसंभूताम्** - யசோதகர்பஸம்பூதாம் = யசோதையின் வயிற்றில் தோன்றியவளாயும் **नारायणवरप्रियाम्** - நாராயணவரப்ரியாம் = நாராயண னுக்கு வேண்டிய வரனைக் கொடுப்பதில் பிரிய முள்ளவளாயும் (நாராயணனுக்குப்ரதான பட்டமகி ஷியாயும்) **नन्दगोपकुले जातां** - நந்தகோபகுலே ஜாதாம் = கோகுலத்தில் நந்தகோபனுடைய வம் சத்தில் ஜனித்தவளாயும் **मंगल्याम्** - மங்கள்யாம் = நித்ய மங்கள ரூபிணியாயும் **कुलवर्धनीम्** - குலவர் தநீம் = தன்னைப் பூஜிப்பவர்களுடைய குலத்தை வளர்ப்பவளாயும் உள்ள தேவியை மனதினால் துதித் தார்.

கருத்துரை:—

ஸ்ரீ வைகுண்டவாசியான ஸ்ரீமந் நாராயணன் கம்ஸாதி களான துஷ்டர்களை வதம் செய்யவேண்டி பூவுலகில் அவ தாரம் செய்தார். அப்பொழுது சக்தியில்லாத கிருஷ்ணனால்

யாதும் செய்ய முடியாது போய்விடும். ஆகவே அவருக்கு உதவியாக ஸ்ரீதேவியும் பலவிதமாக அவதரித்தாள். அதில் இந்தக் காளி அவதாரமும் ஒன்று. இவள் விந்த்ய பர்வதத்தில் வீற்றிருந்து பக்தர்களை அனுக்ரஹித்துக் கொண்டிருப்பதாக புராணங்கள் கூறுகின்றன. இவள் யசோதை வயிற்றில் எப்பொழுது பிறந்தாளோ அப்பொழுதே கிருஷ்ணன் தேவகியிடம் அவதரித்தார்.

அவதரித்ததும் வசுதேவர் கிருஷ்ணரது வார்த்தையால் கிருஷ்ணனைக் கொண்டுபோய் யசோதையிடம் வைத்து விட்டு, அப்பெண் குழந்தையை கம்ஸனிடம் கொடுத்தார். கம்ஸன் அக் குழந்தையை வெட்ட எத்தனித்தான். ஆனால் குழந்தை திடீரென்று ஆகாயத்தில் சென்று காளியாகக் காக்ஷி அளித்தது. இந்த சம்பவத்தைத்தான் தர்மபுத்ரர் இங்கு குறிப்பிடுகிறார்.

நாராயணனாகிய விஷ்ணுவின் 10 அவதாரங்களிலும் தானும் தோன்றி வேண்டியதைச் செய்ததாலும், அந்தந்த அவதாரங்களுக்கேற்றவாறு ருக்மிணியாகவும் ஸீதையாகவும் தோன்றியமையாலும் நாராயணவரப்ரியாம் என்றார். நந்தகோப குலத்தில் உதித்தாள். யசோதைக்கு நந்தகோபனிடம் பிறந்தாள் என்பது பொருள். எப்போதும் கல்யாண குணங்களுடன் கூடியவள் நித்ய ஸுமங்கலியாய் இருப்பவள். எல்லோருக்கும் மங்களத்தைச் செய்பவள். தன்னைப் பூஜிப்பவர்களின் குலம் ஸந்ததி யில்லாமல் போகாது நல்ல புத்ரர்களைக் கொடுத்து வம்சத்தை வளர்ப்பவள். தேவியைப் பூஜிப்பவர்களின் குலம் ஒரு பொழுதும் அழியாது என்பது பொருள்.

**कंसविद्रावणकरीं असुराणां क्षयं करीं ।**
**शिलातटविनिक्षिप्तां आकाशं प्रतिगामिनीम् ॥ ३ ॥**

**கம்ஸவித்ராவணகரீம் அஸுராணாம் க்ஷயம் கரீம்**
**சிலாதடவிநிக்ஷிப்தாம் ஆகாசம் ப்ரதிகாமினீம் ॥3॥**

அவதாரிகை:—

முன் ச்லோகத்தில் தேவியின் பிறப்பைக் கூறினார். இங்கு அவளது செய்கையைக் கூறுகிறார்.

பதவுரை:—

**कंस - கம்ஸ = கம்ஸனை विद्रावणकरीम्-வித்ராவண கரீம் = பயந்து ஓடும்படி செய்கிறவளாயும் असुराणां -**

அஸுராணும் = அஸுரர்களுக்கு क्षयं - க்ஷயம் - நாசத்தை करीं - கரீம் = செய்பவளாயும் शिलातट சிலாதட = கல்மேடையில் विनिक्षिप्तां - வினிக்ஷிப்தாம் = கம்ஸனல் எறியப்பட்டவளாயும் (அதே ஸமயத்தில்) आकाशंप्रति - ஆகாசம்ப்ரதி = ஆகாசத்தைக் குறித்து गामिनीं - காமினீம் = செல்லுபவளாயும் உள்ள தேவியை மனதினல் துதித்தார்.

கருத்துரை :—

எப்பொழுது அம்பிகையை கம்ஸன்வஸுதேவரிட மிருந்து வாங்கி கல்லால் கட்டப்பட்ட மேடையில் எறிந்தானே அப்பொழுதே தேவி ஆகாசத்தில் சென்று விட்டாள். அது ஸமயமே கம்ஸனை பயம் பிடித்துக் கொண்டது. கிருஷ்ணனைக் கொண்டு கம்ஸனை மண்ணுலகை விட்டு விண்ணுலகத்திற் கனுப்பினுள். கம்ஸனை மட்டும் வதம் செய்யவில்லை. அவனைச் சேர்ந்த எல்லா அஸுரர்களையும் வதம் செய்து விட்டாள். பொதுவாக அஸுரர்களின் வம்சத்தையே அழித்து விட்டாள்.

वासुदेवस्य भगिनीं दिव्यमाल्यविभूषितां ।
दिव्यांवरधरां देवीं खड्गखेटकधारिणीम् ॥ ४ ॥

வாஸுதேவஸ்ய பகினீம் திவ்யமால்யவிபூஷிதாம் ।
திவ்யாம்பரதராம் தேவீம் கட்ககேடகதாரிணீம் ॥4॥

அவதாரிகை :—

கிருஷ்ணனுக்கும் இந்த அவதாரத்தில் உதித்த தேவிக்கும் உள்ள ஸம்பந்தத்தையும், தேவியின் அலங்காரத்தையும், ப்ரதானமாக எந்த ஆயுதங்களைத் தரிக்கிருள் என்பதையும் இந்த ச்லோகத்தினல் வர்ணிக்கிருர்.

பதவுரை:—

वासुदेवस्य - வாஸுதேவஸ்ய = வஸுதேவருடைய புத்ரரான கிருஷ்ணனுக்கு भगिनीं - பகினீம் = ஸஹோதரியாயும் दिव्यमाल्य - திவ்யமால்ய = தேவலோகத்தில் உள்ள புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட புஷ்ப மாலை

களால் विभूषिताम् - விபூஷிதாம் = அலங்கரிக்கப்பட்டவளாயும் दिव्यांबरधराम् - திவ்யாம்பரதராம்=தேவ லோகத்து வஸ்த்ரத்தை உடுத்திக்கொண்டவளாயும் खड्ग - கட்க=கத்தி; खेटक-கேடக=கேடயம்; இவைகளை धारिणीम् தாரிணீம்=கையில் வகிப்பவளாயும், உள்ள देवीम्-தேவீம்=துர்கா தேவியை (மனதினால் துதித்தார்.)

கருத்துரை :—

தேவி நந்த குலத்தில் அவதரித்தாள். கிருஷ்ணன் தேவகிக்குப் புத்ரனாகத் தோன்றினார். ஆனால் கிருஷ்ணன் நந்த குலத்தில் வளர்ந்தமையால் தேவிக்கும் கிருஷ்ணனுக்கும் ஸஹோதர ஸம்பந்தம் ஏற்பட்டது. ஒரு குழந்தையைப் பெற்றவர்கள் எப்படி அக் குழந்தைக்குத் தாய் தந்தைகளோ அவ்விதமே வளர்த்தவர்களும் தாய் தந்தைகள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. (ஒரு வயிற்றில் ஜனிப்பது விவக்ஷித மில்லை) தேவ லோகத்தில் உள்ள மந்தாரம், பாரிஜாதம் முதலிய கல்ப வ்ருக்ஷங்களின் பூக்களால் ஆன மாலைகளால் அலங்கரித்துக் கொண்டிருக்கிறாள். அவ்விதமே தேவர்களுக்குரிய ஆடைகளை உடுத்திக் கொண்டிருக்கிறாள். சத்ருக்களை த்வம்சம் செய்வதற்கு கத்தியையும் சத்ருக்களிடமிருந்து பக்தர்களையும் தன்னையும் ரக்ஷிப்பதற்கு ஹேதுவான கேடயத்தையும் கைகளில் வைத்திருக்கிறாள். இம்மாதிரியான தேவியை மனதினால் துதித்தார்.

भारावतरणे पुण्ये ये स्मरन्ति सदाशिवाम् ।
तान्वै तारयसे पापात् पंकेगामिव दुर्बलाम् ॥ ५ ॥

பாராவதரணே புண்யே யே ஸ்மரந்தி ஸதாசிவாம்
தாந்வைதாரயஸே பாபாத் பங்கேகாமிவ துர்ப
[லாம் ॥5॥

அவதாரிகை :

தேவி உலகத்திற்குச் செய்த உபகாரத்தை இந்த ச்லோகத்தினால் கூறுகிறார்.

பதவுரை:—

भारावतरणे -பாராவதரணே=பூமியின் சுமையை இறக்கினவளும் पुण्ये - புண்யே=புண்ய பலனைக்

கொடுப்பவளுமான ஹே தேவியே! सदाशिवाम्-ஸதா சிவாம் = எப்பொழுதும் மங்கள ரூபிணியான त्वाम्-த்வாம் = உன்னை ये स्मरन्ति-யே ஸ்மரந்தி = எவர்கள் நினைக்கிறார்களோ तान् - தான் = அவர்களை पंके - பங்கே - சேற்றில் (அகப்பட்டுக்கொண்ட) दुर्बलां - துர்பலாம் = பலமில்லாத गामिव - காமிவ = பசுவைப் போல पापात् - பாபாத் = பாபத்தினின்றும் तारयसे - தாரயஸே = எடுத்து விடுகிறாய் (விடுவிக்கிறாய்).

கருத்துரை :—

ஒரு மனிதன் தன் தலையில் அதிக கனமுள்ள சுமையைத் தாங்கிச் செல்லுகிறான். அச்சமயம் மற்றொருவன் அவனது சுமையை இறக்கி விட்டால் அவனுக்கு (சுமை தூக்கிச் சென்றவனுக்கு) எவ்வளவு ஸௌக்யம் ஏற்படுகிறதோ அவ்விதமே பூமி தேவியும் கனமுள்ள சுமையைத் தாங்கி நிற்கிறாள். அவளது சுமையையும் இறக்கினால், அவளும் ஸுகமடைவாள். உலகில் எல்லாப் பொருளும் (ஸ்தாவரம் ஜங்கமம் உள்பட) பூமியில்தான் இருக்கின்றன. அவை பூமிதேவிக்குப் பாரமாகத் தோன்றவில்லை. ஆனாலும் ஒன்று மட்டும் பாரமாக இருக்கிறது. அவர்களைத்தான் அஸுரர்கள் ராக்ஷஸர்கள் என்று சொல்லுவது. இவர்களைப் போல் ப்ராணிகளிலும் உண்டு. சாதாரணமாக ஒரு குடும்பத்தில் பலர் இருக்கிறார்கள். அதில் சிலர் மட்டும் எப்பொழுதும் தன்னலத்தை மட்டும் கருதி பிறருக்கு வீணாகத் தொந்தரவு கொடுப்பது வழக்கம். அவர்களைக் குடும்பத்துடன் சேர்த்துக் காப்பாற்றுவதும் அவர்களுடன் பழகுவதும் மிகமிகக் கஷ்டம். இதைச் சொல்லியே சிலர் குடும்ப பாரம் தாங்கவில்லை என்று வருந்துவார்கள். பூமியில் உள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் பூமிதேவியே தாய். நாம் எல்லோரும் ஒரு குடும்பம். இதில் ஒருவருக்கொருவர் தொந்தரவு கொடுத்தால் பூமிதேவிக்குத் துன்பம். எவர்கள் கொடுந்துயரைப் பிறருக்கு விளைவிக்கிறார்களோ அவர்களே பூமிக்குப் பாரம். அவர்களை நல்வழிப்படுத்தி விட்டால் பூமியின் சுமை நீங்கும். இச் சுமையை இறக்கவே ராமகிருஷ்ணாதி அவதாரங்களும், சங்கரர், ராமானுஜர், மத்வர் முதலிய ஆசாரியர்களும் தோன்றினர். யாராலும் அடக்க முடியாத கொடுந்தீயர்களை (மகிஷாஸுரன் போன்றவர்களை) அடக்கவே

அம்பிகையாகிய பராசக்தி துர்கையாகத் தோன்றினாள். (அதுபோலவே காட்டிலுள்ள சிங்கம் முதலிய கொடிய ப்ராணிகளை அரசர்கள் வேட்டையாடுவது வழக்கமாய் இருந்து வந்தது.) அவ்விதம் துர்கையாக அவதரித்து துஷ்டர்களைக் கொன்றும் அடக்கியும் எல்லா உலகத்தையும் ஸௌக்யமாக உயிர் வாழும்படிச் செய்தாள் ஸ்ரீதுர்காதேவி; அது மட்டும் அல்ல. பக்தர்களிடம் உள்ள பாபத்தைப் போக்கி புண்ணியத்தையும் கொடுக்கிறாள். எப்பொழுதும் மங்கள ரூபியாயுமுள்ளவள் இம்மாதிரியான துர்காம்பிகையை யார் துதிக்கின்றார்களோ அவர்களை துர்கா தேவியானவள் (சேற்றில் அகப்பட்டுக்கொண்ட துர்பலமான பசுவை எடுத்து விடுவதுபோல) பாபத்தினின்றும் விடுவிக்கின்றாள். இப்பேர்ப்பட்ட துர்காதேவியை மனதினால் துதிக்கிறார்.

**स्तोतुं प्रचक्रमे भूयः विविधैः स्तोत्रसंभवैः ।**
**आमन्त्र्य दर्शनाकाङ्क्षी राजा देवीं सहानुजः ॥ ६ ॥**

ஸ்தோதும் ப்ரசக்ரமேபூய: விவிதை: ஸ்தோத்ர ஸம்பவை:
ஆமந்த்ரய தர்சனாகாங்க்ஷீ ராஜா தேவீம் ஸஹாநுஜ: ॥6॥

அவதாரிகை:—

தம்பிகளுடன் யுதிஷ்டிரர் மறுபடியும் தேவியை அழைத்து அவளது தர்சனத்தை விரும்பி அநேக ஸ்தோத்ர ஸாரங்களால் துதிக்கிறார் என்பதை இதில் கூறுகிறார்.

பதவுரை:—

**सहानुजः**-ஸஹாநுஜ: = தம்பிகளுடன் கூடிய **राजा** - ராஜா = யுதிஷ்டிரர் **देवीं**- தேவீம் = துர்கையை **दर्शनाकाङ्क्षी**- தர்சனாகாங்க்ஷீ = பார்க்க விரும்பி **देवीं** - தேவீம் = தேவியை **आमन्त्र्य** - ஆமந்த்ரய = அழைத்து **संभवैः** - விவிதை: = அநேக விதமான **विविधैः स्तोत्रः** - ஸ்தோத்ர ஸம்பவை = ஸ்தோத்ரங்களில் உண்டான (ஸ்தோத்ர ஸாரங்களால்) **भूयः** - பூய: = மறுபடியும்

**स्तोतुं** - ஸ்தோதும் = துதிக்க **प्रचक्रमे** - ப்ரசக்ரமே = ஆரம்பித்தார்.

கருத்துரை :—

தர்மர் தம்பிகளுடன் தேவியை தர்சனம் செய்ய விரும்பி அநேகவிதமான ஸதோத்ரங்களால் தேவியை துதித்தார். அம்பிகை ப்ரத்யக்ஷமாகவில்லை. தேவியைப் பற்றிய அநேக ஸ்தோத்ரங்களின் ஸாரமான ஸ்தோத்ரங்களாலும், ஸாரமான பெயர்களாலும் துதிக்க எண்ணினுர். ஆகவே அம்பிகையை அழைத்து மறுபடியும் உயர்ந்த ஸ்தோத்ரங்களால் துதிக்க ஆரம்பித்தார்.

**नमोस्तु वरदे कृष्णे कुमारि ब्रह्मचारिणि ।**
**बालार्क सदृशाकारे पूर्णचन्द्रनिभानने ॥ ७ ॥**

நமோஸ்து வரதே க்ருஷ்ணே குமாரி ப்ரஹ்ம [சாரிணி ।
பாலார்க்கஸத்ருசாகாரே பூர்ணசந்த்ர நிபாநநே ॥7॥

அவதாரிகை :—

தேவியின் புகழை சொல்லிச் சொல்லி அதற்கேற்றவாறு அமைந்த பெயர்களால் தேவியை அழைத்து நமஸ்கரிக்கிருர்.

பதவுரை:—

**वरदे**-வரதே = வேண்டிய வரங்களைக் கொடுப்பவளும் **कृष्णे**-க்ருஷ்ணே = கறுப்பான வர்ணமுள்ளவளும் **कुमारि**-குமாரி = எப்பொழுதுமே 12 வயதுள்ள சரீரம் போன்ற தேகமுள்ளவளும் **ब्रह्मचारिणि** - ப்ரஹ்மசாரிணி = ப்ரஹ்ம ஸ்வரூபத்தைப்பற்றி விசாரித்துக் கொண்டிருப்பவளும் **बालार्कसदृशाकारे** - பாலார்க்கஸத்ருசாகாரே = பால ஸூரியன் போன்ற திருமேனியுள்ளவளும் **पूर्णचन्द्रनिभानने** - பூர்ணசந்த்ர நிபாநநே = பூர்ண சந்திரனுக்கொப்பான முகத்தையுடையவளுமான ஹே தேவியே **नमः**-நம: = நமஸ்காரமானது; **अस्तु** - அஸ்து = உண்டாகட்டும்.

கருத்துரை :—

பக்தர்கள் யாவருக்கும் எந்த வரன்களையும் கொடுப்பவள், கருப்பான வர்ண முள்ளவள், எல்லோரையும் தன் வசப்படுத்தக் கூடியவள், எப்பொழுதுமே கன்னிகைப் பருவத்தில் உள்ளவள், உலகத்தை வளர்ப்பதிலேயே எண்ண முடையவள், (வேதத்தில் கூறப்பட்டவள், இளம் சூரியன் போன்ற திருமேனி யுள்ளவள், ஒருசமயம் கருப்பாய் இருப்பவள், ஒருசமயம் சிவந்த வர்ணமாய்க் காக்ஷி அளிப்பவள்) பூர்ண சந்திரன் போன்ற முக மண்டலத்தை யுடையவள், இவ்விதம் எல்லா வரன்களைக் கொடுக்கக் கூடியவளும், ரஜோகுண தமோகுணங்களைத் தன் வசப் படுத்துபவளுமான தேவியை நமஸ்கரிக்கின்ருர்.

चतुर्भुजे चतुर्वक्त्रे पीनश्रोणिपयोधरे ।
मयूरपिंछवलये केयूरांगदधारिणि ॥ ८ ॥

சதுர்புஜே சதுர்வக்த்ரே பீநச்ரோணிபயோதரே ।
மயூரபிஞ்சவலயே கேயூராங்கததாரிணி ।8॥

பதவுரை:—

**चतुर्भुजे** - சதுர்புஜே=நான்கு கைகளை உடையவளும்; **चतुर्वक्त्रे** - சதுர்வக்த்ரே = நான்கு முகங்களை யுடையவளும் **पीनश्रोणिपयोधरे**-பீநச்ரோணிபயோதரே =பெருத்த நிதம்பத்தையும் குசங்களையும் உடையவளும், **मयूरपिंछवलये** - மயூரபிஞ்சவலயே = மயிலின் தோகையைப்போல் தங்கத்திஞல் செய்யப்பட்ட கங்கணத்தை யுடையவளும், **केयूर**-கேயூர = காரை என்ற ஆபரணம் **अंगद** – அங்கத = நாக ஒத்து இந்த ஆபரணங்களை **धारिणि** - தாரிணி = அணிந்திருப்பவளுமான தேவியை நமஸ்கரிக்கின்றேன்.

கருத்துரை :—

நான்கு கைகளை யுடையவள். நான்கு முகத்தை யுடையவள். நான்கு வேதங்களும் நான்கு முகமாக அமைந்துள்ளன. அம்பிகையின் நிதம்பம் சாமுத்ரிகா சாஸ்திரத்தில் கூறப்பட்டபடி பெருமஞக அமைந்துள்ளது. அதுபோல குசமண்டலங்களும் அமைந்திருக்கின்றன. மயில் தோகை,

யைப்போல் செய்யப்பட்ட தங்கவளையல்களை அணிந்திருப்பவள். வலயம் என்ற சொல்லுக்கு கையில் அணியக்கூடிய ஆபரணம் என்றுதான் சாஸ்திரக்காரர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். (சிலர் மயில் தோகையைத் தலைக்கு ஆபரணமாக அணிந்திருக்கிறாள் என்றும் பொருள் கூறுகின்றனர்.) ருத்ராக்ஷம்போல் பொன்னால் செய்யப்பட்ட ஆபரணத்துக்கு கேயூரம் (தமிழில் காரை) என்று பெயர். அங்கதம் என்பது முழங்கைக்கு மேல் நடுக்கையில் அணிந்து கொள்ளும் ஆபரணம். இதில் பலவிதம் உண்டு. இந்த ஆபரணங்களை அணிந்திருப்பவள். இந்த இரண்டு ஆபரணங்களும் பெண்மணிகளின் ஸௌமங்கல்ய பாவத்தை வளர்க்கின்றன, இத்தன்மையுள்ள அம்பிகையை நமஸ்கரிக்கிறார்.

**भासि देवि यदा पद्मा नारायणपरिग्रहः ।**
**स्वरूपं ब्रह्मचर्यं च विशदं तव खेचरि ॥ ९ ॥**

*பாஸி தேவி யதா பத்மா நாராயணபரிக்ரஹ: ।*
*ஸ்வரூபம் ப்ருஹ்மசர்யம் ச விசதம் தவ கேசரி ॥9॥*

அவதாரிகை:—

இந்த ச்லோகத்தினால் தேவியின் அருளைவேண்டுகிறார்.

பதவுரை:—

हे देवि - *ஹே தேவி=ஓ அம்பிகையே* पद्मा - *பத்மா=பத்மா என்ற பெயருடன் லக்ஷ்மி ரூபமாய் இருந்து கொண்டு* नारायणपरिग्रहः-*நாராயணபரிக்ரஹ:=நாராயணனுக்குத் தர்ம பத்னியாக* भासि - *பாஸி=விளங்குகிறாய் (இந்த மாதிரியாக உன்னை த்யானித்தல் மிகவும் நன்மை பயக்கும்):* हे खेचरि-*ஹே கேசரி=ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவளே;* तव - *தவ=உன்னுடைய* स्वरूपं - *ஸ்வரூபம் = மிகுந்த அழகு வாய்ந்த உருவமும்* ब्रह्मचर्यं च-*ப்ரஹ்மசர்யம் ச=ஆன்ம விசாரம் செய்யக்கூடிய புத்தியையும்* विशदं-*விசதம்=உலகம் நன்கு அறிந்ததே.*

கருத்துரை:—

தாமரைப்பூவில் உதித்தவள். தாமரைப்பூவை கையில் வைத்திருப்பவள். ஆகவே, இவளுக்கு பத்மா, லக்ஷ்மி என்று பெயர். இவ்விதம் நாராயணனுக்கு மனைவியாக இருப்பவள்.

கம்ஸன் எறிந்ததும் ஆகாசத்திற்குச் சென்றதால் கேசரி என்றார். ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவளாகிய தேவியே, உன்னுடைய குணம் உலக மறிந்தது. ஆகாசத்தில் உள்ள ஸூர்யனை எப்படி உலகம் அறிகின்றதோ அவ்விதமே ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிற உன்னுடைய குணமும் லோக ப்ரசித்தம். அவை யாதெனில், உன்னுடைய ரூபமொன்று உன்னுடைய ப்ரம்ஹசரிய மொன்று. இந்திரனுக்கு ஒரு சமயம் தேவியானவள் ஆகாசத்தில் இருந்து ப்ரம்ஹ தத்வத்தை உபதேசித்தாள். இந்த வ்ருத்தாந்தம் கேனோப நிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது.

**कृष्णच्छविसमा कृष्णा संकर्षणसमानना ।**
**बिभ्रती विपुलौ बाहू शक्रध्वजसमुच्छ्रयौ ॥ १० ॥**

**க்ருஷ்ணச்சவிஸமா க்ருஷ்ணா ஸங்கர்ஷண**
**[ஸமானனா ।**
**பிப்ரதீவிபுலௌபாஹூ சக்ரத்வஜஸமுச்ரயௌ**
**॥10॥**

அவதாரிகை:—

அம்பிகையின் ஆக்ருதியைக் கூறுகிறார்.

பதவுரை:—

**कृष्णच्छ विसमा**-கருஷ்ணச்ச விஸமா = க்ருஷ்ண னுடைய காந்திக்கு ஒப்பான தேக காந்தியை யுடையவள் **कृष्णा** – க்ருஷ்ணா = ஆதலால் கருப்பு வர்ண முடையவள் (அதாவது நீலமேகம் போன்ற அல்லது ஆகாசம் போன்ற வர்ண முடையவள்) ஆகவே க்ருஷ்ணா என்று பெயர் **शक्र**-சக்ர = இந்திரனுடைய **ध्वज** - த்வஜ = கொடி மரம்போல் **समुच्छ्रयौ** - ஸமுச்ரயௌ = உன்னதமான **विपुलौ**-விபுலௌ = பெருத்த **बाहू** - பாஹூ = கைகளை; **बिभ्रती**-பிப்ரதீ = வகிப்பவள்

**संकर्षणसमानना** - ஸங்கர்ஷணஸமாநநா = பலராமனு டைய முகம் போன்ற முகத்தையுடையவள்.

கருத்துரை:—

க்ருஷ்ணன் எப்படி நீலமேகச்யாமளனுக இருக்கிருனே அவ்விதமே தேவியு மிருக்கிருள். அதனுல் தேவிக்கு க்ருஷ்ணு என்று பெயர். இந்திரனுடைய கொடி மரம்போல உன்னதமாயும் பெருமனுகவும் உள்ள கைகளையுடையவள். பலராமனுடைய முகம் போன்ற முகத்தை யுடையவள். தேவியின் முகமும் பலராமன் முகமும் ஒருவிதமாகத் தோற்ற மளிக்கின்றது என்பது பொருள்.

**पात्री च पंकजी कंठी स्त्रीविशुद्धा च या भुवि ।**
**पाशं धनुर्महाचक्रं विविधान्यायुधानि च ॥ ११ ॥**

பாத்ரீ ச பங்கஜீ கண்டீ ஸ்த்ரீ விசுத்தா ச யா புவி
பாசம் தனுர்மஹாசக்ரம் விவிதாந்யாயுதாநி ச ||11||

அவதாரிகை :—

அம்பிகையின் குணுதிசயங்களைக் கூறுகிருர்.

பதவுரை :—

**या** - யா = எந்த தேவியானவள் **भुवि** - புவி = பூவுலகில் தோன்றி **पात्री** - பாத்ரீ = பாத்திரத்தைக் கையில் வைத்திருப்பவளும் **पंकजी** - பங்கஜீ = அது போல் மற்ருெரு கையில் தாமரைப்பூவை வைத்தி ருப்பவளும்) **कंठी** - கண்டீ = நல்ல அழகு வாய்ந்த கழுத்தையுடையவளும் (இனிமையான குரல் ஓசை யுள்ளவளும்) **स्त्री**-ஸ்த்ரீ = பெண்ணுருவம் கொண்ட வளும் **विशुद्धा च** - விசுத்தா ச = தான் சுத்தியாக இருந்து கொண்டு பிறரையும் சுத்தி செய்கிறவளு மாய் இருக்கிற (நீ)**पाशं**-பாசம் = கயிற்றையும், **धनुः**- தனு: = வில்லையும் **महाचक्रं** - மஹாசக்ரம் = பெரிய சக்ராயுதத்தையும் **विविधानि** - விவிதானி = அநேக-

விதமான अयुधानि च - ஆயுதானி ச = ஆயுதங்களை யும் धारयसे - தாரயஸே = தரிக்கிருய்.

கருத்துரை :—

பக்தர்களுக்கு உணவளிக்க அமிருதம் நிறைந்த பாத்திரத்தை கையில் ஏந்தி யிருக்கிருள். இதனுல் பக்த வாத்ஸல்யம் தெளிவாகிறது. பெண்ணுருவத்தால் கருணை யைக் காண்பிக்கின்றது. அம்பாள் மற்ற ஒரு கையில் தாமரைப்பூவையும் வைத்திருக்கிருள். அழகான கழுத்தை யுடையவள், இனிமையான குரல் உடையவள். மனதில் களங்கம் இல்லாமையையும் ராகத்வேஷம் இல்லாததையும் (விசுத்ததா) என்றது அறிவிக்கிறது. சத்ருக்களை கட்ட, பாசமும் வில்லும் பெரிய சக்ரமும், இன்னும் அநேக வித மான ஆயுதங்களும் வைத்திருக்கிருள். இம் மகாகுணம் பொருந்திய தேவியை மனதினுல் துதிக்கின்ருர்.

कुंडलाभ्यां सुपूर्णाभ्यां कर्णाभ्यां च विभूषिता ।
चन्द्रविस्पर्धिना देवि मुखेन त्वं विराजसे ॥ १२ ॥

குண்டலாப்யாம்ஸுபூர்ணப்யாம் கர்ணப்யாஞ்ச
விபூஷிதா
சந்த்ரவிஸ்பர்திநா தேவி முகேந த்வம் விரா
ஜஸே ||12||

அவதாரிகை :—

இந்த ச்லோகம் முதல் மூன்று ஸ்லோகங்களால் தேவி யின் ஸ்வரூபம், அணி இவைகளை வர்ணிக்கின்ருர்.

பதவுரை :—

देवि - தேவீ = ஓ அம்பிகையே कुंडलाभ्यां-குண்ட லாப்யாம் = தோடுகளால் पूर्णाभ्यां பூர்ணப்யாம் = நிறைந்த(அழகு வாய்ந்த) कर्णाभ्यां च-கர்ணப்யாம் ச= காதுகளாலும் विभूषिता-விபூஷிதா = அலங்கரிக்கப் பட்டவளான त्वं - த்வம் = நீ; चन्द्रविस्पर्धिना - சந்த்ர விஸ்பர்திந = சந்திரனுடன் பொருமை கொண்ட मुखेन - முகேன = முகத்தினுல், विराजसे-விராஜஸே = ப்ரகாசிக்கின்ருய்.

கருத்துரை :—

அம்பிகை தன் இரு காதுகளிலும் தோடு அணிந்து கொண்டிருக்கிருள். (தோடுகளுக்கு வட மொழியில் தாடங்கம் என்று பெயர்.) ஸுமங்கலி ஸ்திரீகளுக்கு திருமங்கல்யம் எப்படி ப்ரதானமோ அவ்விதமே தோடுகளும் முக்கியம் வாய்ந்தது. அம்பிகையின் காதுகள் இயற்கையாகவே அழகு வாய்ந்தன. மேலும் தாடங்கத்தினுல் அழகு பெற்றது. காதுகளில் வேறு பல ஆபரணங்களை அணிவதுண்டு. ஆனுலும் தோடு அணியாவிட்டால் அது சோபிக்காது. தோடுதான் காதுகளை அழகுறச் செய்யும். ஆகவேதான் குண்டலாப்யாம் ஸுபூர்ணுப்யாம் என்ருர். உன் முகமண்டலம் ப்ரகாசத்தினுலும், அழகினுலும், சந்திரனுடன் போட்டியிடுகிறது. சந்திரனிடம் களங்கம் இருக்கிறது. தேவியின் முகத்தில் களங்கம் இல்லை. ஆதலால் சந்திரனைக் காட்டிலும் தேவியின் முகம் உயர்ந்தது. சந்திரன் போல் பக்தர்களை ஸந்தோஷிக்கும்படிச் செய்யும் தேவியை மனதினுல் துதிக்கின்ருர்.

मुकुटेन विचित्रेण केशबन्धेन शोभिना ।
भुजंगाऽभोगवासेन श्रोणिसूत्रेण राजता ॥ १३ ॥

முகுடேன விசித்ரேண கேசபந்தேந சோபிநா ।
புஜங்கா போகவாஸேந ச்ரோணிஸூத்ரேண
ராஜதா ॥13॥

विभ्राजसे च बद्धेन भोगेनेवेह मन्थरः ।
ध्वजेन शिखिपिंछानां उछ्रितेन विराजसे ॥ १४ ॥

விப்ராஜஸே ச பத்தேந போகேனேவேஹ மந்த்ர:।
த்வஜேன சிகிபிஞ்ச்சானும் உச்ரிதேந விரா
ஜஸே ॥14॥

பதவுரை :—

**विचित्रेण**-விசித்ரேண = மிகமிக அழகு வாய்ந்த **मुकुटेन**-முகுடேன = கிரீடத்தினுலும் **भुजंगा भोगवासेन**-புஜங்கா போகவாஸேன = ரத்னங்களால் இழைக்கப்பட்ட தங்க ஜடைநாகம் என்ற ஆபரணத்தால் **शोभिना** - சோபிநு = ப்ரகாசிக்கின்றதாயும் உள்ள

**केशवन्धेन** - கேசபந்தேன = பாதபர்யந்தம் நீண்டு கருமை வாய்ந்து பளபளப்புடன் கூடிய அழகான பின்னலாலும் **विराजसे** - விராஜஸே – ப்ரகாசிக்கின்றாய் **मद्धेन**-பத்தேன = சுற்றிச் சுற்றிக்கட்டப் பட்ட **भोगेन**-போகேன = ஆதிசேஷனின் உடலால் **मन्थर इव** - மந்தர இவ = மந்தர பர்வதம்போல் **भुजंगा भोगवासेन**-புஜங்கா போகவாஸேன = தங்கக் கொடியினால் பாம்பு போல் செய்யப்பட்டு மூன்று வடம் கொண்ட **राजता**-ராஜதா = பிரகாசிக்கின்ற **श्रोणि सूत्रेण** - ச்ரோணி ஸூத்ரேண = தங்கத்தினால் செய்யப்பட்ட அரைஞாண் கொடியினால் **विभ्राजसे** - விப்ராஜஸே = விசேஷமாகப் ப்ரகாசிக்கின்றாய்; **शिखिपिञ्छानां** - சிகிபிஞ்சானும் = மயில் தோகையைக் கொண்டு செய்யப்பட்ட **उच्छ्रितेन**-உச்ரிதேன = ரொம்பவும் உயரமான **ध्वजेन** - த்வஜேன = கொடியினால் **विभ्राजसे** - விப்ராஜஸே = விசேஷமாக ப்ரகாசிக்கின்றாய்.

கருத்துரை :—

தேவியானவள், ரத்னங்கள் இழைத்த பொன் கிரீடத்தை தலையில் அணிந்து கொண்டிருக்கிறாள். அம்பிகையின் பின்னல் அவளது பாதம் வரையிலும் நீண்டு கருமையாய் பளபளப்புடன் ப்ரகாசிக்கிறது. மேலும் அழகுடன் கூடிய பின்னலில் ரத்னங்கள் இழைத்த தங்க ஜடை நாகம் என்ற ஆபரணத்தை அணிந்து கொண்டிருக்கிறாள். அது மிகவும் அம்பிகையையும், அவளது பின்னலையும் விசேஷமாக அழகுறச் செய்கிறது.

அம்பிகை ஒட்டியாணத்திற்குப் பதில் மூன்று வடம் கொண்ட தங்கக் கொடியை அறை ஞாண் கயிறாக இடுப்பில் அணிந்திருக்கிறாள். அமிருதம் கடையும்பொழுது ஆதிசேஷனால் சுற்றப்பட்டுள்ள மந்தர பர்வதம்போல் இருக்கிறதாக அம்பிகையின் இடுப்பை வர்ணிக்கிறார். அம்பிகையின் அழகான மயில் தோகை கொடி, அம்பிகையின் அழகை

